

# 6

# கண்ணும் காதும்

சூடாமணிக்குக் குமட்டிக் கொண்டு வந்தது. அதையும் மீறிக் கொண்டு, "போங்க, அங்கே போய் டெலிபோனை எடுத் துக்குங்க" என்று அவசரமாகச் சொன்னாள். அந்தப் பையன் விழித்தான்.

"இதோ பக்கத்திலே, பக்கத்திலே!" என்று சூடாமணி டெலிபோன் 'பூத்'தின் பலகைச் சுவரைத் தட்டினாள்.

"கதவு மூடியிருக்கே?" என்று அந்தப் பையன் சொன்னான்.

"திறந்துட்டுப் போ! சீக்கிரம்!" அந்தப் பையன் கதவோடு திண்டாடினான்.

சூடாமணி தன் வாய்க்குள்ளேயே திட்டிக் கொண்டாள். "சரி, இங்கேயே பேசு, சீக்கிரம்!" என்று தன் டெலிபோனை அவனிடம் கொடுத்தாள். எழுந்து வெளியே வந்து பக்கத்து அறைக்கதவைத் திறக்க இழுத்தாள். கதவுப் பிடி கையோடு வந்துவிட்டது.

அந்தப் பையன் அவள் கொடுத்த டெலிபோனையும் பயன் படுத்த முடியாமல் திண்டாடினான். "நீங்கதான் பாருங்க. ஏதோ குர்னு சத்தம் வருது" என்றான்.

சூடாமணி அதை வாங்கிக் காதில் வைத்துக் கொண்டாள்.

மறுபுறத்தில் டெலிபோனை வைத்துவிட்டது தெரிந்தது.

"டெலிபோனிலே குரல் கேட்டதும் உடனே பதில் குரல் கொடுக்கக் கூடாது? அவங்க திரும்ப வைச்சுட்டாங்களே?" என்றாள்.

அவன் பதில் தராமல் விழித்தான்.

சூடாமணி உள்ளே போய்த் தன்னிடத்தில் உட்கார்ந்து கொண்டாள். அந்த ஊனமுற்றோர் டெலிபோன் 'பூத்'தில்

நன்றாகக் கையை வீசிக் கொட்டாவி விடக் கூட இடமில்லாது போனாலும் எல்லாப் பக்கத்திலும் கதவுகள் பொருத்திய வாசலும் ஜன்னலும்தான். அவள் உட்கார்ந்து டெலிபோன் நம்பரைச் சுற்ற ஓரிடம். ஒரு தடுப்பு வைத்துப் பக்கத்தில் டெலிபோன் பேசவேண்டியவர்களுக்கு ஒரு கூண்டு. அந்தக் கூண்டுக்கு வெளிப் புறமாகத்தான் கதவு. அது இப்போது திறக்க முடியாமல் சிக்கிக் கொண்டு விட்டது.

சூடாமணி மறுபடியும் அந்தப் பையன் கொடுத்த எண்ணைச் சுழற்றினாள். “இந்தா பேசு” என்று அவளுடைய டெலிபோனை அவனிடம் நீட்டினாள். அவளுடைய குமட்டல் நின்றுவிட்டது.

இம்முறை அவன் ஜரூராக இருந்தான். பேசி முடித்து விட்டு அவளிடம் அரை ரூபாயைக் கொடுத்தான்.

‘‘இன்னும் அரை ரூபா கொடு’’ என்று சூடாமணி சொன்னாள்.

“ஒரு டெலிபோன் காலுக்கு ஆம்பது காசுதானே?”

“முதல் வாட்டி பண்ணினதுக்கு யார் காசு கொடுப்பாங்க, அது மீட்டர்லே ஓடியிருக்குமே?”

“நான் பேசலியே?”

“நீ பேசாட்டி? அங்கே குரல் கொடுத்துத்தானே உன்னை பேசச் சொன்னேன்?”

“நான் பேசலியே.”

‘‘இரண்டு கால் போட்டிருக்கு. இரண்டுக்கும் காசு கொடுத்துத்தான் ஆகணும்.”

அந்தப் பையன் மேலும் விவாதிக்காமல் இன்னொரு அரை ரூபாய் கொடுத்துவிட்டுப் போனான். சூடாமணிக்கு வேதனை யாயிருந்தது. காலையில் ‘பூத்’திறந்து வைத்து ஒரு மணி நேரம் கழித்துத்தான் போணியாயிற்று. அதுவும் ஒரு சிறுவனை வயிற் றெரிச்சல் கொட்டிக் கொள்கிற மாதிரி.

அவ்வளவு பஸ், ஜனங்கள் இரைச்சலிலும் அவளுக்கு ஓர் ஒலி தனியாகக் கேட்டது. ஒரு கையில் வெள்ளைக் கைத் தடியோடு மனோகரன் வந்து கொண்டிருந்தான்.

அவன் தடி தரையில் தட்டிய வண்ணம் ‘பூத்’தை நெருங்கிக் கொண்டிருப்பதை அவள் அப்படியே உட்கார்ந்த வண்ணம்

பார்த்துக் கொண்டிருந்தாள். அவன் 'பூத்' அருகில் வந்து நின்று மெதுவாக "சூடாமணி" என்று கூப்பிட்டான்.

"எல்லாம் இங்கே இருக்கேன்" என்றாள்.

மனோகரன் தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டு தன்னுடைய பையை ஜன்னலருகே நீட்டினான். அவள் வாங்கி உள்ளே இருந்த ஓர் ஆணியில் மாட்டினாள். அவள் வெளியே வர, அவன் சிறிது தடுமாறிய வண்ணம் 'பூத்' உள்ளே நுழைந்து ஸ்டூலில் உட்கார்ந்து கொண்டான். கையால் ஒரு பிறையைத் தடவி "டை—ரக்டரி எங்கே வைச்சிருக்கே?" என்று கேட்டான். அது கீழே தரை யில் கிடந்தது. சூடாமணி அதை அவன் கையில் கொடுத்தாள்.

"ஏன் ஒரேயிடத்திலே வைக்கமாட்டேங்கறே?" என்று சொல்லி அவன் அதைப் பிறையில் வைத்தான். "சரி, நீ போ" என்றான்.

"காலேலேந்து ஒரே ஒரு கிராக்கிதான். அதோ டப்பாலே ஒரு ரூபா போட்டிருக்கேன். இந்தக் கஸ்டமர் கதவு திறக்க மாட்டேங்குது."

அவன் உட்கார்ந்த இடத்திலிருந்தே துழாவி, பக்கத்துக் கூண்டுப் பக்கம் இருந்த சிறு கண்ணாடி ஜன்னலை விலக்கினான். கைத்தடி கொண்டு அந்தத் துவாரம் வழியாகக் கூண்டுக் கதவைத் தள்ளினான். அது திறந்து கொண்டது. "எந்த நேரத்திலேயும் கஸ்டமர்ஸை இங்கேயே நின்னு பேசிப் போக விடாதே. எந்த டெலிபோன்காரன் பார்த்துக் கம்பிளெயிண்ட் பண்ணிடுவான்னு தெரியாது."

"கம்ப்ளெயிண்ட் கம்ப்ளெயிண்ட்டுன்னு சாகறீங்களே, எல்லாம் ஒழுங்கா இருந்தாத்தானே?"

"சரி சரி. இன்னிக்கு நாள் சரியில்லே. நீ போய்ப் பன்னெண்டு மணிக்குச் சாப்பாடு எடுத்துட்டு வா."

அவள் பன்னிரெண்டு மணிக்குத் திரும்பி வந்த போது ஐந்தாறு பேர் டெலிபோன் பூத்துக்கு அருகே இருந்தார்கள். ஆனால் மனோகரன் அவள் வந்ததை எப்படியோ தெரிந்து கொண்டு விட்டான். "கொஞ்ச நேரம் இரு. இவங்க கால் எல்லாம் முடிச்சுட்டு வந்துடறேன்" என்று சொன்னான்.

திடீரென்று "சார், சார்" என்று உரக்கக் கூப்பிட்டான்.

அப்போதுதான் காசு கொடுத்து விட்டுச் சென்று கொண்டி ருந்த ஒருவன் நின்று திரும்பினான்.

மனோகரன் மீண்டும் "சார், சார்" என்றான்.

"என்ன?" என்று அந்த ஆள் கேட்டான்.

"நீங்க கொடுத்த காசு செல்லாது போலே இருக்கே?" என்று மனோகரன் சொன்னான்.

அங்கிருந்தவர்களில் ஒருவன் அதை வாங்கிப் பார்த்தான். "இது நம்ப ஊர் காசேயில்லை" என்றான். சூடாமணி அதை வாங்கிப் பார்த்து முதல் ஆளிடம் திரும்பக் கொடுத்தாள். அவன் "மன்னிச்சுடுங்க. எனக்கே தெரியாது" என்று சொல்லிவிட்டு வேறு பணம் கொடுத்தான்.

சூடாமணி விலகி நின்று மனோகரனை உற்றுப் பார்த்தாள். அவன் அந்தச் சிறு இடத்தில் வேர்த்து விருவிருத்தப்படி உட்கார்ந்திருந்தான். ஓரிரு நிமிடங்கள் டெலிபோன் கூண்டுக்குள் பேசிவிட்டு வருபவர்களே புழுக்கம் தாங்க மாட்டாமல் திண்டாடியபடி வெளியே வருவார்கள். மனோகரன் மணிக்கணக்கில் அங்கு உட்கார்ந்து கொண்டு தன் காதையும் கையையுமே நம்பிப் பணம் வாங்கிக் கொடுத்துச் சமாளிக்கிறான். டெலிபோன் இலாகாவின் நிபந்தனைகளை மீறுவதில்லை. அவன் டெலிபோன் கருவியைக் காதில் வைத்துக் கொண்டிருப்பான். டெலிபோன் செய்ய வேண்டியவர்கள் எண்ணை அவர்களே சுழற்ற வேண்டும். இணைப்புக் கிடைத்து விட்டது என்று தெரிந்தவுடன் மனோகரன் சைகை செய்வான். அவர்கள் பக்கத்துக் கூண்டிற்குள் சென்று அங்குள்ள டெலிபோன் கருவியை எடுத்துப் பேசவேண்டும். வெளிச்சம் இருட்டு ஏதும் தெரியாதவன் ஒரு சிக்கலுமில்லாமல் சமாளித்துக் கொள்கிறான். அவளோ அன்றைக்கு டெலிபோன் செய்யவந்த முதல் நபரிடமே அடாவடியாக நடந்து கொள்ள வேண்டியிருந்தது.

"யாராவது இருக்காங்களா?" என்று மனோகரன் குரல் கொடுத்தான்.

"இதோ பேசறாரே இவர்தான் கடைசி" என்று சூடாமணி சொன்னாள். அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே இரு பெண்கள் டெலிபோன் செய்ய வந்தார்கள். சூடாமணி அவர்களிடம், "இரண்டு நிமிஷம் இருங்க. அவருக்குச் சாப்பாடு எடுத்துக் கொடுத்திட்டு வந்துடறேன்" என்றாள்.

மனோகரன் வெளியே வந்து ஓரமாகக் கீழே உட்கார்ந்தான். சூடாமணி அவனிடம் டிபன் காரியரைக் கொடுத்தாள்.

"தண்ணி பாட்டிலைப் பக்கத்திலே வைச்சுட்டு அவுங்களைக் கவனி" என்றான்.

சூடாமணி டெலிபோன் 'பூத்'தில் நுழைந்து ஸ்டூலில் உட்கார்ந்து கொண்டாள். ஜன்னலருகே நின்றிருந்த பெண்களிடம் "நீங்களே டயல் பண்ணிக்குங்க" என்றாள்.

மனோகரன் அவனாகச் சாப்பாடு எடுத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். ஒரு பருக்கை கீழே போடவில்லை. முடிவாகத் தண்ணீரும் குடித்தான். டிபன் காரியரை ஒழுங்காக மூடி வைத்தான். "என் தடி எடுத்துக் கொடு. வெத்திலை பாக்கு வாங்கி வரேன்" என்றான்.

''நான் வாங்கிட்டு வரேனே?'' என்று சூடாமணி சொன்னாள்.

''வேண்டாம். எனக்குக் காலை கொஞ்சம் நீட்டி மடக்கணும்."

சூடாமணி டிபன் காரியரை எடுத்துப் பையில் போட்டாள். மனோகரன் அவனுடைய தடியைத் தட்டிய வண்ணம் சுவரோரமாகச் சென்றான். அவன் கண்ணிலிருந்து மறைவதற்கும் டெலிபோன் அதிகாரி அங்கு வருவதற்கும் சரியாக இருந்தது.

"என்னம்மா, அவர் எங்கே?"

"அவர் இப்போதான் சாப்பிட்டாருங்க. அதோ வெத்திலை பாக்கு வாங்கி வரப் போயிருக்காரு."

"ஆமா, அதென்ன லாட்டரிச் சீட்டு?"

"ஒண்ணுமில்லீங்க. நான் டிரெயின்லே வரப்போ போறப்போ விப்பேன்."

"டிரெய்னிலே வித்தா இங்கே ஏன் மாட்டியிருக்கு? இது டெலிபோன் பூத்தா, லாட்டரி டிக்கெட் விக்கிற கடையா?"

"இல்லீங்க. இதோ எடுத்துடறேன். சும்மா ஆணியிலே மாட்டியிருக்கோம்."

"முதல்லே அதை எடு அங்கேயிருந்து, இந்தத் தவணை பணம் கட்டிட்டீங்களா?"

"இல்லீங்க. நாளைக்குக் கட்டிடறோம். இங்கே இன்னும் ஆளுங்க சரியா வர்றதேயில்லீங்க."

"பஸ் ஸ்டாண்டுக்குப் பக்கத்திலே இருக்கு. எப்படி வராம இருப்பாங்க? கஸ்டமர் கதவுப் பிடி எங்கே? இதெல்லாம் ஒண்ணும் பெருக்கிச் சுத்தமே செய்யறதில்லையா?"

"பண்ணினேன் சார். இன்னிக்கு காலையிலே வந்து நான்தான் எல்லாம் துடைச்சு வைச்சேன்."

"அப்படியுமா இவ்வளவு குப்பை? நான் அடுத்த வாட்டி வரப்போ இப்படி எல்லாம் இருக்கக் கூடாது. முதல்லே அந்தக் கதவுப் பிடியை முடுக்கச் சொல்லு."

"அந்தக் கதவு சரியா மூடித் திறக்க மாட்டேங்குது சார். இன்னிக் காலையிலே திறக்கவே முடியலை."

"எப்படி முடியும், இவ்வளவு தூசி தும்பட்டை இருந்தா? சரி. முதல்லே இங்கே நிக்கிறவங்களைக் கவனி. சும்மா காக்க வைக்காதே."

மனோகரன் கால் மணி நேரம் பொறுத்துத்தான் திரும்பி வந்தான். சூடாமணி இறங்கி அவன் உட்கார இடம் தந்தாள். ஆனால் அவனுக்கு எப்படியோ தெரிந்துவிட்டது. "என்னாச்சு?" என்று கேட்டான்.

"ஒண்ணுமில்லை."

"இல்லே, ஏதோ ஆயிருக்கு."

"அந்த மீசைக்காரன் வந்தான்."

"என்ன சொன்னாரு?"

"இங்கே லாட்டரி டிக்கெட் விக்கக் கூடாதுன்னான்."

"அதை எடுத்துட்டேயில்லே?"

"அதோ கீழே டைரக்டரி பக்கம் வைச்சிருக்கேன்."

"இன்னும் ஏதாவது சொன்னாரா?"

"கதவை ஒழுங்குபடுத்தச் சொன்னான்."

"காலையிலேயே பிடி கையோடு வந்துடுத்துன்னு சொன்னா சுப்பிரமணியனைக் கூப்பிட்டு முடுக்கச் சொல்லியிருப் பேனில்லே? உள்ளே ஒரே குப்பையும் கூளமுமா இருக்குமே!"

"ஆமாம், அதையும் சொன்னான்."

"பாத்தியா, பாத்தியா சூடாமணி? நீ கொஞ்சம் கவனிச் சிக்கக் கூடாதா? நீ என்கூட இருக்கிற தைரியத்திலே தான் இதுக்கு விண்ணப்பம் அனுப்பிச்சி எவ்வளவு பேரு காலைக் கையைப்

பிடிச்சு வாங்கியிருக்கேன்? இப்படிப் பேச்சு வாங்க வைச்சுட்டியே? சரி, இந்த லாட்டரிச் சீட்டு அட்டையை எடுத்துட்டுப் போ. அது எதுக்கு ஒண்ணு இங்கே!"

சூடாமணி சாப்பாட்டுப் பையையும் லாட்டரிச் சீட்டு அட்டையையும் எடுத்துக் கொண்டு கிளம்பினாள். மனோகரன் மெதுவாகக் கூப்பிட்டான். "சூடாமணி."

நாலடி சென்றவள் திரும்பி வந்து அவன் காதருகில், "ஏன் இப்படி நாலு பேர் கூடற இடத்திலே என் பேரை உரக்கக் கத்திக் கூப்பிடறீங்க? நீங்க சொல்ல வேண்டியதை எல்லாம் வீட்டிலே வைச்சுக்கலாமே?" என்றாள்.

"வீட்டிலேயா?" என்றான். அதற்கு எவ்வளவோ அர்த்தம் தொனித்தது.

ஜன்னலருகில் ஒருவர் நாணயம் கொண்டு பலகையைத் தட்டினார். மனோகரன் டெலிபோன் கருவியைக் காதில் வைத்துக் கொண்டு, "டயல் பண்ணுங்க சார்" என்றான்.

அந்த நபர் வெகு நேரம் டெலிபோனில் பேசிக் கொண்டிருந்தார். அவர் பேசி முடித்துக் காசைக் கொடுத்தபோது மனோகரன் சொன்னான்: "சார், நீங்க நம்பரைச் சீட்டிலே எழுதலியே?"

"எங்கே எழுதணும்?"

"அதோ அங்கே ஓரத்திலே ஒரு அட்டை இருக்கு பாருங்க. பென்சில் இருக்குமே?"

"இருக்கு, இருக்கு."

அந்த நபர் அங்கிருந்து சென்றவுடன் சூடாமணி மனோகரன் அருகில் சென்று, 'நான் வரேங்க' என்றாள்.

மனோகரன் பதில் தரவில்லை.

"கோபமா?" என்று சூடாமணி கேட்டாள்.

"இல்லையே."

"உங்க முகத்திலே பார்த்தாலே தெரியுதே."

"அதெல்லாம் கோபம் ஒண்ணும் இல்லை."

"ஏதோ படபடப்பாய்ப் பேசிட்டேன். இனிமே காலையிலே முதல் வேலை இந்த இடத்தைச் சுத்தமாப் பெருக்கி வைச்சுடறேன்."

"சரி."

"வந்து... இன்னொண்ணு சொல்லட்டுங்களா?"

"என்ன?"

சூடாமணி அவன் கையைப் பிடித்துக் கொண்டாள். "நமக்—குக் குழந்தை பொறக்கப் போவுது."

"அப்படியா?" மனோகரன் முகம் மலர்ந்தது. அவனும் அவள் கையைப் பற்றிக் கொண்டான். "அந்த நல்ல வேலைதானோ என்னவோ நம்ம பொழைப்புக்குக் கவுரமா ஒருவழி பொறந்திருக்கு" என்றான்.

சூடாமணி பேசாமலிருந்தாள்.

"கடவுளாப் பார்த்துத்தான் கண் திறந்திருக்காரு."

"நான் போயிட்டு வரேங்க."

"பத்திரமாப் போ. வண்டியும் கார்களும் ஏகமாப் போறது. பாத்துப் போ."

சூடாமணி இரண்டடி எடுத்து வைப்பதற்குள் மனோகரன் தன் தடியால் இரண்டு முறை தரையைத் தட்டினான். சூடாமணி அவனருகில் சென்று, "என்னங்க?" என்று கேட்டாள்.

"ஒண்ணுமில்லே. நினைச்சுண்டேன். பொறக்கப் போறதுக்காவது கண் ஒழுங்கா இருக்கணும்."

சூடாமணி தன் கண்ணைத் துடைத்துக் கொண்டாள்.

1982